[5th September 1960

விட மாட்டேன் என்று சொல்லுகிறார்கள். அதனால் அங்குள்ள நிலத்தை சட்ட பூர்வமாக ஆர்ஜிதம் செய்து ரோடு போடுவதற்கு சர்க்கார் முன் வருமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : என்னிடம் இப்பொழுது இருக்கக்கூடிய தகவல் கீழ்க்கண்டவாறு இருக்கிறது :—

"No representation or mahajar petition in the matter has been received by the Government. The Collector of North Arcot has stated that no mahajar from the villagers of Kidampalayam, Velanandal, Mattavettu and Kuppam villages in Kalasapakkam Block were received in regard to the formation of roads except a petition that was received in February 1960, from the President, Kidampalayam Panchayat for the formation of a road leading to Kidampalayam under 'Relief Programme'."

I do not find any petition sent to the Government or to the Collector. It does not depend on petitions alone . . .

MR. SPEAKER : I have to make a request to the hon. Members not to place me in an embarassing situation and to decide who is telling the truth—the Hon. Minister or the hon. Member. The hon. Members should not put supplementary questions for which they know the answers. If they have any information they should give it to the Speaker.

இம்மாதிரி உப கேள்விகள் கேட்கக் கூடாது. கனம் அமைச்சர் சொல்வதை ஒப்புக்கொள்வதாக இருந்தால் ஒப்புக்கொள்ளலாம்இ, ல்லா விட்டால் ஒப்புக்கொள்ளாமல் இருக்கலாம். அதற்கு நான் என்ன செய்வது. இப்படிப்பட்ட உப கேள்வி கேட்டால் என்னால் ஒன்றும் செய்ய முடியாது. கேள்விக்கு பதில் சொல்ல வேண்டியவர் கனம் அமைச்சர். அவர் சொல்வதில் நம்பிக்கை இல்லை என்று கனம் அங்கத்தினருக்குத் தோன்றினால் கனம் அமைச்சர் மீது நம்பிக்கை இல்லாத் தீர்மானம் கொண்டு வரலாம். ஆகவே அதுதான் வழியே தவிர இம்மாதிரியான கேள்விகளைக் கேட்பது என்பது சரியல்ல. இம்மாதிரி கேட்டு என்னை சங்கடமான நிலைமையில் வைப்பது சரியல்ல என்பதை மட்டும் சொல்லிக் கொள்ளுகிறேன்.

SRI S. M. ANNAMALAI : ஸார். . . . . . ஸார், ஸார்.

MR. SPEAKER :: ஸார், ஸார் என்று கூப்பிட்டு என்ன செய்வது ? நான் ரூலிங் கொடுத்து விட்டேன். அதற்குப் பிறகு நீங்கள் என்ன சொல்லப் போகிறீர்கள் !

*Cinema Theatres*

*447 Q.—SRI P. G. MANICKAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னை மாகாணத்திலே எத்தனை சினிமா தியேட்டர்கள் இருக்கின்றன ?

(ஆ) டூரிங் சினிமாக் கொட்டகைகள் எத்தனை இருக்கின்றன ?

(இ) 1959–60-ல் சினிமா ஆட்டங்கள் மூலம் சர்க்காருக்குக் கிடைத்த வரித்தொகை எவ்வளவு ?

(ஈ) வரித் தொகையிலிருந்து சென்னை கார்ப்பரேஷனுக்கும், முனிசிபாலிட்டிகளுக்கும், பஞ்சாயத்துக்களுக்கும் பகிர்ந்தளிக்கப்பட்ட தொகை எவ்வளவு ?

5th September 1960]

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*), (*b*) & (*c*): Rs. 1,81,00,373 (this figure includes Show Tax and the tax collected under the Madras Entertainments Tax Act, 1939, on the admission to race courses. Separate particulars regarding the amount of tax collected through cinemas alone are not available.)

(*d*) The total amount apportioned to—

| | RS. |
|---|---|
| The Corporation of Madras ... ... ... | 36,26,270 |
| Municipalities ... ... ... ... | 69,65,570 |
| Panchayat Boards ... ... ... ... | 45,25,930 |
| District Boards ... ... ... ... ... | 2,08,573 |
| Townships ... ... ... ... ... | 29,010 |
| Cantonment ... ... ... ... ... | 52,919 |
| Total .. | 1,54,08,272 |

SRI P. G. MANICKAM: சார், சினிமாக் கொட்டைகளின் மூலம் கிடைக்கிற வரித் தொகை கார்ப்பரேஷனுக்கும், முனிசிபாலிட்டிக்கும், பஞ்சாயத்துக்கும் பிரித்துக் கொடுக்கப்படுகின்றனவா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இந்தவரி அவ்வளவும் நகர சபைக்கும், முனிசிபாலிட்டிக்கும், பஞ்சாயத்து போர்டுகளுக்கும், ஜில்லா போர்டுகளுக்கும், டெவெலப்மெண்ட் கவுன்சிலுக்கும் கொடுக்கப்படுகிறது. அவ்வாறு கொடுக்கப்படுகிற மொத்தத் தொகை ஒருகோடியே ஐம்பத்தி நாலு லட்சத்து, எண்ணாயிரத்து இருநூற்று எழுபத்திரண்டு ரூபாய்.

SRI P. G. MANICKAM: சர்க்கார், தற்போது ஜில்லா போர்டுகளுக்கு கொடுக்கப்பட்டு வரும் இந்தத் தொகை போலவே பஞ்சாயத்து யூனியன் களுக்குக் கொடுப்பதற்கு விதிகள் திருத்தி அமைக்கப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அதற்குத் தனிக்கேள்வி வேண்டும்.

SRI K. ANBAZHAGAN: இந்த வரிகளில் இருந்து நகரசபைகளுக்குக் கிடைக்கிற பங்கு அதிகமானதாக இல்லை என்பதற்காக இந்தத் தொகையை அதிகரிப்பதற்கு முதல் இரண்டு வகுப்பு டிக்கெட் சார்ஜை உயர்த்த அனு மதிக்கவேண்டும் என்று நகரசபை கேட்டிருக்கிறதா ? அதுபற்றி அர சாங்கத்தின் முடிவு என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அதைப்பற்றி தனிக் கேள்வி போடவேண்டும்.

SRI A. A. RASHEED: What is the percentage of proceeds that is appropriated towards the collection charges?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: It is 10 per cent, Sir.

SRI P. S. K. LAKSHMIPATHI RAJ: தனது நடிப்பின் மூலம் ஏராளமான பணத்தை வரியாகச் சர்க்காருக்கு அளித்திருக்கிற தியாகராஜ பாகவதரின் குடும்பத்திற்கு இப்போது அரசாங்கம் ஏதாவது உதவி அளிக்க முன் வருமா ?

MR. SPEAKER: தனிக் கேள்வி போட வேண்டும்.